28th April 1960]

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2, 3, 4 and 1 and the Preamble were put and carried.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: Sir, I move—

"That the Courtallam Township (Validation of Taxes and Library Cess) Bill, 1960 (L.A. Bill No. 16 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

### (5) THE MADRAS COINAGE (ALTERATION OF REFERENCES) BILL, 1960 (L.A. BILL NO. 9 OF 1960).

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras Coinage (Alteration of References) Bill, 1960 (L.A. Bill No. 9 of 1960) be taken into consideration."

இது அணாவை புதுக்காசாக மாற்றுகிற மசோதா. ஏற்கெனவே சிலவை மாற்றப்பட்டிருக்கின்றன. இன்னும் கொஞ்சம் பாக்கி இருக்கும் என்று நினைக்கிறேன். அவ்வப்போது தயாரிக்கப்படும் அந்த அந்தச் சட்டங்களுக்கும் கொண்டுவருகிறோம். முன்னே எந்தக் கொள்கை அடிப்படையில் இந்தச் சபை ஒத்துக் கொண்டதோ அதேமுறையில் இப்போதும் மாற்றி அமைக்கப்படுகிறது. ஆகையால் இந்த மசோதாவை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: Motion moved—

"That the Madras Coinage (Alteration of References) Bill, 1960 (L.A. Bill No. 9 of 1960) be taken into consideration."

SRI S. M. ANNAMALAI: சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த மசோதாவைக் குறித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த மசோதாவில் கடைசியாகச் சொல்லப்பட்டிருக்கிற—அதாவது "ஆப்ஜெக்ட்ஸ் அண்டு ரீசன்ஸில்" "for the purpose of altering references to annas and pies into references to decimal coins" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த மசோதாவைப் படித்து பார்க்கிறபோது 1 அணாவாக, அதாவது 6 நயாபைசாவாக உள்ளது 7 நயாபைசாவாக ஆக்கப்பட்டிருக்கிறது. அதேபோல வேறு சில குறிப்புகளையும் பார்த்தேன். உதாரணமாக இன்னும் இரண்டு சட்டங்களையும் பற்றி சொல்ல ஆசைப்படுகிறேன்.

"தி சொஸைட்டீஸ் ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் ஆப் 1860" என்று இருக்கிறது. இதற்கு முன்னால் உள்ள சட்டத்தைப் பார்த்தால் 100 வார்த்தைகளுக்கு இரண்டு அணா என்று இருக்கிறது. இப்பொழுது கொண்டுவரப்பட்டிருக்கும் மசோதாவைப் பார்த்தால், 200 வேர்ட்ஸ்க்கு 25 நயாபைசே என்று சொல்லப்பட்டிருக்கிறது. பார்ப்பதற்கு சிறியதாகத்தான் இருக்கிறது. 200 words and part thereof என்றிருக்கிறது. முன்புள்ள சட்டப்படி 210 வேர்ட்ஸ் இருந்தால் 36 நயாபைசே வசூல் செய்யப்படும். ஆனால் இப்பொழுதுள்ள மசோதாப்படி 50 நயாபைசேயாகிறது. ஆக, 210 வேர்ட்ஸ்க்கு 36-க்கு பதிலாக 50 நயாபைசே

[Sri S. M. Annamalai] [28th April 1960

என்று வரும்போது கூடுதலாக 14 நயாபைசே கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆக, இந்த மசோதா மூலம் அதற்கு கூடுதல் 14 நயாபைசே கேட்கிருர்கள். பின்னர், மதருஸ் கோவாப்பரேட்டிவ் லான்ட் மார்ட்கேஜ் பாங்கு ஆக்ட், 1934, அதையும் பார்த்தேன். இதில் "In sub-section 2 of section 11, for the words one anna' the words '7 naye Paise' may be substituted என்று சொல்லப் பட்டிருக்கிறது. கூட்டுறவு சங்கத்தில் தான்யங்களைக் கொண்டுபோய் அடமானம் வைத்தால் அதன் பிறகு கட்ட வேண்டிய தவணைப் பிரகாரம் கட்டவில்லையென்ருல் ஒரு மாதம் பொறுத்திருந்து பிறகு கட்ட வேண்டிய தொகைக்காக தான்யத்தை ஏலத்திலோ அல்லது விற்ருே பணத்தை வசூல் செய்யலாம். அப்படி வசூல் செய்யும்போது காஸ்டாக ஒரு ரூபாய்க்கு ஒரு அணு வசூல் செய்யலாம் என்று பழைய சட்டத்தில் இருக்கிறது. இப்பொழுதுள்ள சட்டப் பிரகாரம் ரூபாய் ஒன்றுக்கு 7 நயாபைசே தேவை என்கிருர்கள். ஐயாயிரம் ரூபாய் தான்யத்தின் மதிப்பு என்றிருந்தால், பழைய சட்டப்படி 300 ரூபாய் காஸ்ட் கட்டவேண்டுமென்று சொன்னுல் புதிய மசோதாப்படி 350 ரூபாய் கட்ட வேண்டும். ஆப்ஜெக்ட்ஸ் அண்டு ரீஸன்ஸில் சொல்லப்பட்டிருக்கிறது, 6¼ நயாபைசா என்றிருப்பதை 7 நயாபைசா என்ருக்கவேண்டுமென்று. பணம் அதிகமாக தேவையிருக்கிறது என்ற காரணத்தினுல் மறைமுகமாக இப்படி ஏற்றியிருக்கிருர்கள். 6¼ என்பதை 6 ஆக போடக்கூடாதா? ஷெட்யூல்களைப் பார்த்தால் இது நன்கு தெரியும். நான்காவது ஷெட்யூலில், இரண்டணுவிற்கு 12 என்று வரவேண்டியதை 15 நயாபைசே என்று போட்டிருக்கிருர்கள். மூன்று ரூபாய் ஆறு அணு என்று வருமிடத்தில் ரூபாய் மூன்று, 40 நயாபைசே என்று இருக்கிறது. இப்படி ஒன்று, இரண்டு என்று கூட்டியிருக்கிருர்கள். சென்ட்ரல் ஆக்டில் 6¼ நயாபைசாவை 6 நயாபைசாவாக ஆக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு அதை ஏழு நயாபைசா என்று மாற்றியிருக்கிருர்கள். சென்ட்ரல் ஆக்டில்கூட அப்படியில்லை. ஆகவே, இந்த 6¼ நயாபைசே என்பதை 6 நயாபைசே என்று ஆக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதேபோல் ஆங்காங்கு திருத்தங்கள் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஐந்தாம் பக்கத்தில் பார்த்தால் தெரியும், ஒரு அணு என்பதற்கு ஐந்து நயாபைசே என்று போடப்பட்டிருப்பது. எங்கெங்கு குறைக்க முடியுமோ அங்கு குறைத்து, ஜாஸ்தி செய்ய வேண்டிய இடத்தில் ஜாஸ்தி செய்து கணக்கு சரியாக இருக்கவேண்டுமென்று போடப்பட்டிருக்கிறது. ஆறேகால் நயாபைசே என்று போட முடியாது. இரண்டணு என்பதை 12 நயாபைசே என்று போடவேண்டுமென்று சொன்னுல், ரூபாய்க்கு 96 பைசாதான் வரும். ஆனுல் ஒரு ரூபாய்க்கு 100 பைசா இருக்க வேண்டும். சில இடங்களில் சிறிது கூடலாம், சிலயிடங்களில் சிறிது குறையலாம். கணக்கு சரியாக இருக்க வேண்டுமென்று போடப்பட்டிருக்கிறது.

28th April 1960] [Sri C. Subramaniam]

இதனுல் அதிக வருவாய் வந்து விடாது. அப்படி வந்தாலும் அது சரியர்கப் பயன்படுத்தப்படும் என்றும் சொல்லிக் கொள் கிறேன்.

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras Coinage (Alteration of References) Bill, 1960 (L.A. Bill No. 9 of 1960) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

The Schedule was put and carried.

DEPUTY SPEAKER: There is an amendment proposed to Schedule IV by Mr. Srinivasa Iyer, who is not in his seat.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, there is only one schedule to the Bill and that has been put to vote and carried. 'The Fourth Schedule' mentioned in the Bill relates to the Presidency Small Cause Courts Act, 1882 and it comes under the Schedule which has already been approved. So, there is no separate Schedule as Schedule IV.

DEPUTY SPEAKER: Yes, I shall put clause 1 to vote.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras Coinage (Alteration of References) Bill, 1960 (L.A. Bill No. 9 of 1960) be passed."

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras Coinage (Alteration of References) Bill, 1960 (L.A. Bill No. 9 of 1960) be passed".

The motion was put and carried and the Bill was passed.

DEPUTY SPEAKER: The House will now rise for lunch and meet again at 3.30 p.m.

The House then rose.

[After lunch—3-30 p.m.]

MR. SPEAKER: We shall now continue the discussion on the Demands for Grants.

V.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1960–61—*cont.*

(1) DEMAND VIII—IRRIGATION.

(2) DEMAND XXXVII—CAPITAL OUTLAY ON IRRIGATION—*cont.*

SRI V. K. RAMASWAMY MUDALIAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானியத்தின் மீது கொடுக்கப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆமோதித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய நாட்டிலே, பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் அநேகமாக முடிந்து விட்டது. இன்னும் இரண் டொரு இடங்களில் இருப்பதையும் கூடிய சீக்கிரமே முடித்து விடுவோம். இப்படி திருப்தி கரமாக வேலை செய்திருக்கும்